[5th November 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No such complaints have been received.

SRI A. GOVINDASAMY : இந்த செயற்கை கருத்தரிக்கும் முறையை ஒவ்வொரு தேசீய விஸ்தரிப்புத் திட்டத்திலும் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறுதான் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI D. S. AUTHIMOOLAM : இந்த நாட்டிலே இருக்கும் கோடிக் கணக்கான கால்நடைகளுக்கு சரியான போஷாக்கு அளிக்கும் வகையில் மேச்சல் நில வசதி இல்லாமல் இருக்கும்பொழுது இந்த " ஆர்ட்டிபிஷியல் இன்செமினேஷன் " ஸ்கீமை கொண்டுவருவதன் நோக்கம் என்ன ? (சிரிப்பு.)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நல்ல மாடுகளை வளர்க்கவேண்டுமென்பதற்காக இந்தத் திட்டம் மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

*Leprosy Clinic at Ariyalur*

* 888 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri K. R. Viswanathan) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there was a proposal to start a Leprosy Clinic at Ariyalur, Udaiyarpalayam taluk, Tiruchirappalli district; and

(b) if so, why it was not given effect to?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) No suitable Government or private building is available at Ariyalur to house the Centre.

SRI M. K. SOMASUNDARAM : இந்த மாதிரி லெப்ரசி கிளினிக்குகளை தனிப்பட்ட முறையில் சர்க்கார் கட்டிடம் கட்டி ஆரம்பிக்கக் கூடாதா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: அந்த மாதிரியும் அநேக இடங்களில் கட்டப்பட்டு வருகிறது. இங்கே கட்டடம் கிடைக்காததினால் அந்த நிலையத்தை இங்கே வைக்கமுடியவில்லை.

*Car Accidents*

* 889 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை, கன்னியாகுமரி, தென்னாற்காடு, திருச்சி எல்லைகள் சந்திக்குமிடத்தில் ஆற்றின்மீது கட்டப்பட்டுள்ள பாலம் அணைக்கட்டு பக்கத்தில் உள்ள சாலையில் " எஸ் " ( S ) போன்ற வளைவில் கார்கள் அடிக்கடி மோதி விபத்துக்கள் உண்டாவது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) அந்த சாலையையும் பாலத்தையும் நேராக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்க ஏதேனும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN: (அ) கனம் அங்கத்தினர் கூறிய இடத்தில் 1953-ல் இருந்து ஒரே ஒரு விபத்துத்தான் ஏற்பட்டிருக்கின்றது. அது அரசாங்கத்திற்குத் தெரியும்.

(ஆ) இல்லை, ஐயா.